சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுருப்யோநம:

# திருவானைக்கா

# பதிற்றுப்பத்தந்தாதி



இஃது

உறையூர்.

சைவசித்தாந்த சபையடியார்களி

லொருவராகிய

## தே. பெரியசாமிபிள்ளையால்

இயற்றப்பட்டு


கா. கு. சங்கரலிங்க முதலியாரவர்களாற் றமது

டாட்ஸன் பிரஸ்ஸில்

பதிக்கலாயிற்று.

1904.




உறையூர் வித்துவான்

மகா-ா-ா-ஸ்ரீ

## சி. வாஞ்சைலிங்க வைத்தியநாத செட்டியாரவர்கள்

இயற்றியது.

சீர்பூத்த சம்புமுூ லத்தடியில் வாழுமொரு தேவ தேவை, கார்பூத்த
னைமுழுதுங் கழிந்துகழி யாதபெருங் கதியைச் சார யோர்பூத்த பதிற்று
பத் தந்தாதி யாலேத்தி யிறைஞ்சி னானேல், பார்பூத்த புலவரெலாம் புகழ்
பெரிய சாமியெனு ம்பான்மை யோனே.

வேலுமயிலுந்துணை.

## சிறப்புப் பாயிரம்.

செந்தோம் கலாசாலை இயற்றமிழ்ப் போதகாசாரியரும்

மதுரை புதுத்தமிழ்ச் சங்கப்புலவரும் ஆகிய

**மகாவித்துவசிகா ரத்தினம்**

**ஸ்ரீமாந் திருமயிலை**

**சண்முகம் பிள்ளையவர்கள்**

இயற்றியது.

பூவைவணைத் தொருமாலும் புண்டரிக மேயானும் போற்றிக் காணாக்
காவைபலப் பலசூழுங் காவையிறை யடியிணைக்கே கருதித் தந்தான்
நாவையருந் தமிழ்க்கடவு ளொட்டியமெய்ப் புலவரெலா நாட வின்றோர்
பாவையகந் தனிற்பதிற்றுப் பத்தந்தா திப்பெயரிற் பரிந்து மாதோ.

நதிபூத்த செழுஞ்சடையார் காந்திமதி யம்மையொடு கலக்கப் பூத்து
துதிபூத்த பதியுடையான் பதிபசுபா சத்திறனே தொகுத்தெல் லோர்க்
கும், விதிபூத்த வகையினளித் தருணிலைகாட் டுஞ்சபையின் மேவப்பூத்த
கதிபூத்த நெறியிலொழு கொருபெரிய சாமியெனுங் கவிஞ ரேறே.



சென்னை அஷ்டாவதானம்

பூவை

**மகா-ள-ள-ஸ்ரீ**

**கலியாணசுந்தர முதலியாரவர்கள்**

இயற்றியது

வானைத்தா வியவெண்ணெ வலிலீழலுழி வதிதல் வணப்பா யேற்ற
வானைக்காப் பெருமாற்குப் பதிற்றுப்பத் தந்தாதி யலங்க ரித்துத்
தேனைத்தேர் சுவைமலிசெம் மொழிநிரப்பச் சொற்றிட்டான் செய்யு
ளுளுஞ் சோனைப்போற் பொழிபெரிய சாமிநா வலனென்னத் துலங்கு
வோனே

# சிறப்புப் பாயிரம்.

யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை

வித்துவான் மகா-ள-ள-ஸ்ரீ

## சி. தாமோதரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

மதுவள ரினிய காவும் வாவியும் பயிலு நாப்பட்
பொதுளுறு கவினு மோதும் பொன்னினீர்ப் பொலிவு மான்ற
முதுமறை யொலியு மிக்க முன்னவை ஞானக் காவை
யிதுசுவை யமுதோ தேனோ வெய்திய கண்டோ வென்ன

மதித்த நல்லறி வினன்பர் வாய்செவி யாக மாந்த
வுதித்தசொன் மழைவ ழுள்ளி னுருகுநர் காரதாகப்
பதிற்றொடு பத்துச் சேர்த்த வந்தாதி யன்பின் யாத்து
துதித்தன னுறைந்த வேளாண் டொல்குலத் தோன்ற லானோன்

நற்குண மறிவு மேன்மை நாவன்மை ஞான மோன
சிற்பர னடிசே ரன்பு சிவநெறி விரிக்கு மாற்றல்
பொற்புறு தேர்ச்சி மாண்பு புகழிவை பொலியு சீரான்
முற்றவப் பெரிய சாமி முதுதமிழ்க் கவிஞன் மாதோ.



தரங்கை வித்துவான்

மகா-ள-ள-ஸ்ரீ

## ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள்

இயற்றியது.

மூவரா யவைவருலன் முதன்மைகொடு மிருந்தருள்செய் முழுநீர்ப் பொன்னி, பாவரா யப்பதியா னைக்காவந் தாதியினைப் பரிவி னீந்தா, ஐவரா யக்கவிஞர் நலமேவப் புவிவாழ்நர் ஞான மெய்தத், தேவரா யக்குரிசில் செய்ப்பெரிய சாமியெனுஞ் சிரி யோனே.

உறையூர் சைவசித்தாந்தசபை கவுரவ காரியதரிசியார்

## தொ. மு. நல்லசாமி பிள்ளையவர்கள்

இயற்றியது.

அருமறையின் னமுதங்காணு தப்பா லின்ற
வருபவமா மாலைக்கா வண்ணல் மீது
கருவுறையுங் கொடியதுயர்க் கடல் கடந்தே
கருதுமுயர் தலைவீடாங் கரையிற் சார
திருவுறையுந் தெள்ளுதமிழ் சிறக்கப் பத்தாய்ச்
சேர்ந்தபத்தந் தாதிசொன்னான் றெளிந்தோர் கொள்ளத்
திருவுறையூ ரினில்வந்த சீர்மை யாளன்
றிகழ்பெரிய சாமியெனுந் திறன்மிக் கோனே.

திருப்பரங்குன்றம்

## அ. ரு. நாராயணசரணரவர்களியற்றியது.

சீர்பூத்த புனல்பரந்து வரும்பொன்னி யாற்றினிடை சிறந்து தோன்றி, பேர்பூத்த சம்புமுனி சிரத்துதித்து வளர்ந்தோங்கும் பெருவெண்ணாவ, லேர்பூத்த நிழலுறையும் சம்புநா யகன்மலர்த்தாட்கின்ப மார்ந்த, நார்பூத்த மனமுறுநற் பெரியசாமிக்கவிஞன் நலமுற் றோங்க. க

பத்திபுரி யடியவர்கள் படித்துணர்ந்து கதியடையப் பதிற்றுப் பத்தாம், மெத்தியசீ ரந்தாதி தனைமொழிந்தா னதனைநகு மதித்து விண்ணில், வைத்திசையும் புகழ்படைத்த கருநிழல்வா ழிந்திரனு மேங்கு நாளு, முத்தலமும் புகழ்படைத்த காட்சிவாழ் முதன்மையருள் மொழிபொய்யாது.

குணமெனுநற் பருவதத்திற் வளர்குமர சாமியெனுங் குரிசில் முன்னோன், மணமுறுநன் மலரெடுத்து மாதேவன் றாட்கணிந்த வரத்தாற் றோன்றி, துணருறுநற் குழலுமையா ளுடனுறையுங் குழகனடி தொண்டு வாய்ந்து, பணமுடிவா ழுலகினுளார் புகழ்ந் தேத்தும் பலவழியைப் பலகா லோர்ந்து.

புன்செய்கை நோக்குமவர் திசையினுநில் லாதகற்றும் புனிதசீலன், நன்செய்கை தனைநோக்கித் தருமஞ்செய் பவர்நடக்குந் தகைமை பூண்டோன், இன்செய்கை யுடையவரை யெதிரேற்று வுபசரிக்கு மெழிற்செவ் வாயான், மன்செய்கை தனையறிந்து நடப்பதிலோர் மனுவேந்தன் மயக்கங் கொள்வான்.

இன்னவெலா முடைமையொடு வெழிலமைந்த மடமாத ரொருநான் றுந்தான், துன்னவந்து புடைசூழுந் தொகுதியினன் மதனெனச் சொல்வாய் தின்னும், பன்னலமார் குணநுபவ முழுது

மைந்து பலர்புகழும் பண்பின் மிக்கோன், நன்னயசங் கரலிங்க
வேளச்சிறப்பதிக்கிங்கு நல்கினனே.

திரிசிரபுரம் நாஷனல் ஹைஸ்கூல். தமிழ்ப்பண்டிதரும்.
உறையூர் சைவசித்தாந்தசபை உதவிசபைத்தலைவருமாகிய,

மகா-ள-ள-ஸ்ரீ. **தி. ச. ஆறுமுகநயினாரவர்கள்.**

இயற்றிய.

நிலைமண்டிலவாசிரியப்பா.

சீர்தரு செந்தமிழ் சிவணிய நாட்டி, லாதித் தன்குல வரையர்கோ லோ
ச்சச், சூழ்கா ரணத்தால் சோழ ராயின, ரன்னவர் பொலியு மமர ருல
கேய்த், திக்கிலம் பரவு மிலங்குசோ ணாட்டுப், பொன்னி யாற்றுப் பொ
ற்பார் தலத்து, ளத்தியுஞ் சிலம்பியு மம்பிகை யயனு, மடிமல ரேற்றி
யருணலம் பெற்ற, வாம்பல் வனத்து றப்பத் தலமாம், சதுர்மறை யோ
துஞ் சதுர்த்தப் பொருளான், காரணத் தியேயன் கதித்து நிறீஇ, பழவி
னை யொரீஇப் பதம்பெற நல்குந், திருவருட் டுறையின் சீரார்ந் துள்ளா
ர், தவநெறி யோங்குந் தமிழ்மறை யாரியம், மிக்கொலி செவியின் மீக்
கொண் டுற்றே, விம்பர்வந் தொல்லை யிருகரங் குவிக்கும், விண்ணோர் து
திபெறு வெண்ணுவ லிமுலமர், ஞான தலைக்கொள் நம்பன் றேய, நவந்
தரு பேத நடிப்பவன் மூன்று, பத்துட னாறு பகுத்துமே னின்றோன், பு
லவர் நாவின் புகழ்பல னூலு, ளேனப் படுவ துறந்தையம் பதிதிகழ்,
மேழிக் கொடியுடை வேளாண் குடியிற், றேவரா யன்மாற் செய்ய திரு
மேனிக், கலந்துவந் தருளுங் காந்தி மதியா, ரஞ்செய் சீரடி யருந்துதி
யாற்றித், திருப்பணி யுஞற்றிச் செய்யருந் தவத்து, (மகனாற் றந்தை) ம
ன்னிய பாவிற், கிலக்கா யுதித்தோ னிம்மையி னலம்பெற, மெய்கண்ட
நூலின் மேதை வாய்ந்த, பெருமை மிக்க பெரியசா மிப்பெயர் டல
மை யுள்ளோன் புதுமனைங் கமழுங், கனியோ தேனே கண்டோபா கெ
னக், கற்றோ ருவக்கக் கண்ணுறுத லான்சீர், மயிலயி னீத்து மண்ந்தசங்
தானந், தாங்கும் பேறு தருமுத்தி நாதன், சைவம் வளர்த்த சம்பந்த மூ
ர்த்தி, யாதித் திகை மன்னவெம் மன்னவா, ரருளுறு பாவா லகமலங்
தேத்திப், பத்தி ரசமுதற் பாங்கிற் சார்ந்தே, ஆறு மண்டுங் குலங்கிரி பு
ம்மு, முரணி மார்ப முரமார் மிடற்று, நன்பு கொளவே நற்சீ ரடிதொ
டை, தருபதிற்றுப் பத்துத் தந்த வந்தாதி, மாலை சாற்றி மகிழ்ந்தா னத
னை, வாரே ரன்று வார்கட லமுதங், கொன்றையா னருளாற் குலவிப
பெற்றனை, நல்லவர் போற்று நலஞ்செறி காட்டூர்த், தொண்டை வே
ளாண் டொன்மை முதன்மையன், குமாரசா மிப்பெயர்ப் குணம்புகழுற்
றோன், சிவத்தைப் பேணிற் றவத்திற் கழகெனுஞ், செப்பு மவ் வையு
ரை செப்பமா வோர்ந்து, நற்றவத் துதித்து நானிலம் புகழும், செல்வப்
புதல்வன் சுப்பிர மணியவேட், டன்னுடன் வந்த தகைசா ரன்பன்,
சைவந் தழைக்க நன்மதி யுள்ளோன், சங்கர லிங்கஞ் சார்பே ராள,
னம்புவி யாரின் றன்புபெற் றுய்ய, நன்னச்சி லேற்றித் தந்தன னீதன்
றே, விசைதவழ் நாட்டு விளைவித்தோர் முறையே,





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுருப்யோநம:

# திருவானைக்கா பதிற்றுப்பத்தந்தாதி.

## கடவுள் வாழ்த்து.

### காப்பு விநாயகர்.

திருந்தியமா மறையயிலுந் திருவானைக் காவிறைக்குப்
பொருந்தியநற் பதிற்றுப்பத் தந்தாதி புகலவொரு
டருந்தியக்க மொழித்தெனக்குச் சதுர்முகனு மவன்வருகா
மருந்தியனுந் தொழுமானை வதனமுடை யான்பதமே.

### ஜம்பு நாயகர்.

பொன்பூத்த மார்பனய னரிபுலவர் முதன்மற்றைப் புனிதர்
யாருங், கொன்பூத்த பலவகையாம் குளிர்நீர்கொண் டாட்டியது
மன்றிக் கோதி, றென்பூத்த நபப்புனலே சடையிருந்து மதில்வி
ழைவு தீர்கி லானாய், மின்பூத்த புனலுருவாய் வேழவனத் தமர்ந்
தானை வேண்டல் செய்வாம்.

## கடவுள் வாழ்த்து.

### அகிலாண்ட நாயகியார்

மணமலிபூந் துணர்க்குழலுஞ் சிலைநுதலுஞ் செவ்வாயும் வய ங்கு தோளுங், கணமலியன் பருக்கருளைப் பொழிவிழியுந் தனத டமுங் கடகக் கையுங், குணமலிபல் லுயிரெவையு மீன்றதிரு வுதரமும்பொற் கொடிநேர் நன்றும், வணமலியெ மகிலாண்ட நாயகிதன் மலரடியும் வணக்கஞ் செய்வாம்.

### செல்வ விநாயகர்

நீர்கொள் சடிலப் பரஞ்சுடரா நிமலா னந்தப் பெருமானார் நார்கொ ளன்பி னோடளித்த நவிலுமொருகோட் டிருசெவிநற் சீர்கொண் மூன்று மதநால்வாய்த் திகழு மைந்து கரமுடைய வேர்கொள் செல்வ மழகளிறென் னிதயத் தடத்தி லிலங் கிடுமால்

### குமாரக் கடவுள்

முன்ன மறையா கமமங்க மொழியுங் கலைகண் முழுதுணர்ந்த துன்னு மலயத் தமிழ்க்கடற்குத் தூய வோத்தை வளியுறுத்த மின்னுங் கருணைப் பெரும்பிழம்பாம் வென்றி யயில்வேற் கரத் தெந்தை, பொன்னங் கமலப் பூங்கழலைப் புகழ்ந்து பாட லெம் வேலை.

### திருநந்தி தேவர்

தெள்ளிய கங்கை வேய்ந்த செஞ்சடைப் பெருமான் வாழும், வெள்ளியங் கயிலை காக்கும் மேதகு சீர்வாய்க் தோங்கு, நள்ளிய கருணை யோடு நந்தமை யடிமை கொள்ளும், வள்ளிய நந்திப் புத் தேண் மலரடிக் கன்பு செய்வாம்.

### திருஞான சம்மந்த சுவாமிகள்

கும்பந் தன்னி லிருகும்ப மேந்தி யொருகொம் புதித்திடவுந். தம்பந் தனில்வந் தான்சிவசா ரூபந்தனைத்தாங் கிடவுமரு, ளம்பந் தனைய முலைசுரந்தெம் மம்மை தரும்பா லயில்ஞான, சம்பந் தனே, யெஞ்ஞான்றுந் தமியேன் செய்தல் சிந்தனையே.

### திருநாவுக்கரசு சுவாமிகள்

அன்ன வடிவாய் நான்முகத்தோ னளவில் கால நேடிநின்று, மின்ன படியென் றறியவொணு விண்டைச் சடையா னெம்பெரு மா, னன்னங் கொடுவெந் தாற்றினிடை யளிக்கப் புரியு மரியதமிழ் மன்னுந் தவத்து நாவரசர் வனச மலர்மென் கழல் பணிவாம்.

## கடவுள் வாழ்த்து.

### சுந்தர மூர்த்தி சுவாமிகள்.

குல்லைப் படலை யோன்கிடியாய்க் கூவை யிடந்துங் காண்பரிதா நல்ல கமலப் பதமகன்று நயனம் வளரு மிடத்திலும்வாங், தொல்லை மகிழ்வி னொடுமுடிமே லொன்றப் புரியு முயர்தவத்து, வல்லைப் பொருவு முலைப்பரவை மணாள னடியை வணங்குவாம்.

### மாணிக்கவாசக சுவாமிகள்.

எழுதும் வேலை நான்முகத்தோர்க் கியற்றி யெழுதா மறைபுகன்ற, கொழுது வரிவண் டுழக்குமலர்க் கொன்றை புனைந்த பூரணனே, பழுதி லொருபூ சுரவடிவாய்ப் போந்து பதுமக் கரநோவ வெழுதும் படிநற் றீந்தமிழ்சொ லிறைவர் மலர்த்தா ளிறைஞ்சிடு வாம்.

### சண்டேசுர நாயனார் முதலாக வறுபத்து மூவர்கள்.

தந்தை யொருதா டனைத்துணித்துச் சாற்றுந் தனக்கொப் பொருவரிலா, வந்தி மதியின் றொளிர்சடிலத் தமலன் கமல விரு தாள்சேர், மைந்தர் தாளு மற்றபான் மும்மை யடியர் மலர்த்தா ளுஞ், சிந்தை யுவந்தே சிந்திப்போந் தீய வினையுஞ் சிந்திப்போம்.

### அவையடக்கம்.

வாணுதற் றேவி யார்செய் வயங்கு பூசனை தழீஇய, தாணுவோர் சிலந்தி செய்பூ சனையையுந் தழீஇய வாற்றா, மேலுணு மடியர் செய்யு மினியபா வேற்ற லோடுங், கோணுறு மனத்தேன் சொற்ற செய்யுளுங் கொண்டாள் வாணுல்.



# நூல்.

சீரார் கமல மலர்தனிற் செறிந்து விளங்குந் திசைமுகனுங்
காரார் மேனி நெடுமாலுங் காண்டற் கரிய கழலிணையை
நாரா ருளமி லடியேனு நண்ணுங் கால முளதேயோ
வேரா ரானைக் காவிலம ரீசா வடிய ரிரும்பேறே

இரும்பார் வலிய மனமுடைய வெளியே னின்ற னெழின்மிகுஞ்
சுரும்பார் கமல மலரடிக்கே யுகடீர் தமிழாற் பாமாலை
யிரும்பா தனிற் சூட்டுமா றென்றோ முன்னந் தவமிழைத்தேன்
கரும்பார் கழனித் திருவானைக் காவின் மேய கண்ணுதலே ௨

கண்ணே கண்ணி னுண்மணியே கருத்தே கருதப் படும்பொருளே
விண்ணே விண்ண வர்க்கிறையே தீயே வீயி னுறுமணமே
பண்ணே பண்ணின் மேவிசையே பரவும் வெண்ணா வன்னிழல்வா
ழண்ணா நின்றன் பொன்னருளை யடியே னென்றோ வெய்துவதே ௩

எய்தி நினது மலரடியி னின்ப மடியார் நுகர்தரயான்
பொய்தி கழுமிவ் வுலகினிடைப் புண்ணா ருடலை யோம்பிநித
மைதி கழும்வெங் கணைவிழியார் வலையின் வாய்ப்பட் டுழல்கின்
றேன், மொய்தி கழும்வெண் ணாவனிழன் முதல்வா முக்கண் மு
ன்னவனே

முன்னா மறையு முணர்வரிய முதல்வா வானைக் காவினுறை
மின்னி னனைய சடையதனின் வேய்ந்த கொன்றைப் பட்டலையனே
பின்னை கேள்வ னுணர்வரிய பிறங்கு நின்றன் றாளிணைக்கீ
ழென்னை யிருத்தி வைப்பதனுக் கிரங்கி யருள்வ தென்றுகொ
லோ

என்று தவழு மாமதில்சூ ழெழிலா ரானைக் காவினமர்
கன்று குணிலாக் கனியுகுத்தோன் காண்டற் கரிய பரம்பொருளை
மன்று ணடிக்கும் பெருமானை வந்திப் பார்த மகத்தொளியை
யின்று வணங்கப் புகழ்வாயே லென்றோ குறைநிற் கென்மனமே

மனமே நினக்கோர் மாற்றமின்று வகுப்பே னதனைக் கேண்மதிநீ
வனமே வான வரையோங்கும் வளமார் காவின் மாமணியைக்
கனமே யனைய மிடறுடையெங் கனக வரைவிற் கடவுளைத்
தினமே யுன்னி வாழ்த்துதிமேற் சேர்வாய் முத்திச் செழுங்கரை
யே ௭

செழுநீர்ப் பொன்னி புடைசெறியுஞ் சீர்கொள் காவை நகர்மேய
மழுவார் கரத்தெம் பெருமானை மதிசூ டியநம் பிஞ்ஞகனைத்

தொழுவார்க் கிரங்கி யருள்வானைத் தூய்மை யானைப் பாடாமற்
பொழுதே போக்கித் திரிந்தேபொல்லா மைய லாழ்ந்தேனே

மையார் கண்டப் பெருந்தகையை வளமார் காவை மாமணியைச்
செய்யா மறைசொல் செழுஞ்சுடரைச் சிந்தைத் தலத்து னிருத்
தாதே, மெய்யார் குழன்மங் கையர்தமையே நோடி வாளா வாணு
ளைப், பொய்யா ருலகிற் போக்குறும்ப் புலைய னேற்கிங் குய்வுண்
டோ

உய்யு நெறியே சிறிதோரா துலகிற் பாஞ்ச ராத்திரமுன்
வெய்ய சமயப் படுகுழியில் வீழ்ந்து வருந்தா வாறருளா
றுய்ய சைவசமயமெனுந் துலங்கு நெறியிற் கெனக்களித்தின்
னறைய னேனுக் காவிலம ரப்பனுட்கொண் டருளினனே.

வேறு.

அருளினுற் பொலியுந் திருவுருக் கொடுநல் லறவிடை மீதினி லீ
வர்ந்தே, தெருளினுற் பொலியு மடியவர்க் கருளுஞ் செல்வமே நி
ன்னடிமலரை, மருளினுற் பொலியு மனத்திடைக் கண்டு வஞ்ச
னேன் மகிழுநா ளுளதோ, பொருளினுற் பொலியுங் காவையின்
மேய புண்ணியா புசன்மறைக் கொழுந்தே

மறையவன் முகுந்த னிந்திரன் முதலா மற்றுள வானவர்க் கெல்
லா, மிறையவ னானைக் காவினி லமர்ந்தோ னிணையடிப் புகழினை
யேத்திக், குறையினி லெவரு மெடுத்தெடுத் தோத்தத் தலைமை
சால ருள்பெரு மடியார், குறையினை மிகவு முடையவா னுலைக
க்குறிப்பது மனத்திடை யிலையே க௨

மனத்திடை நின்றன் றிருவுரு வன்றி மற்றுள வானவர் தம்மைத்
தினைத்தனை யடியேன் கனவிடை யேனுஞ் சிந்திப்பே னல்லனியா
ன கண்டாய், சினத்தினுற் புரங்கண் மூன்றையு முன்னாச் செழு
ந்தழற் கொள்ளுமா புரிந்த, கனத்தினுங் கரிய கண்டனே காவை
க்கடிநகம ரமர்ந்தவின் னவனே

விண்ணவ னேநின் றிருவுருத் தனையே விருப்பொடுங் கருத்திலெ
ஞ் ஞான்றுங், திண்ணமா மதித்துன் வரவெதிர் பார்க்குஞ் சிறிய
னேன் றனைவிடேல் கண்டாய், கண்ணுறற் பரமே தவப்பரா சா
னுங் கவுதம னுந்தொழுங் காவை, விண்ணிழி கோயின் மேவிய
தெய்வ விழுத்தகு சம்புநா யகனே

சம்புநாய யகனே சாற்றகி லாண்டத் தலைவிதன் பூசனைக் கன்றித்
தும்பியுஞ் சியுஞ் செய்தபூ சனைக்குஞ் சுரந்தருள் புரிந்தனோர்ந் த

டைந்தே, னம்பணி சடையெம் மாதியே கோதி லுலையெறி யமுத வா ரிதியே, நம்புறு ஞான தலத்திடை வைகு நலங்கெழு சுத்த நிர்க் குணனே கரு

குணப்பெருங் கடலி னகடுகீன் டொழுகுங் குளிர்புனற் பொன்னி சூழ்ந் தொளிருந், தணப்பருஞ் சீர்கொள் காவையின் மேய சம் பூவே நின்னடி மலரைப், பணப்பெரும் பாந்தட் சுடிகையிற் கிட ந்த பார்மிசைப் பத்தியி னுடுமோர், கணப்பொழு தேனு நினைந் திடா தின்றிக்கடையனே னுய்யுநாளுளதோ கசு

நாளெலா நின்றன் றிருவடி மலரை நாடுமா றறிவிழந் தெளிய வாளலாமுண்கண் மங்கையர் மையன் வாரிதி யாழ்ந்திவண் கழிக் குங், கோளெலா முடைய கொடுமனத்தேற்குன் குரைகழ லளித் தருள் கண்டாய், தூளெலா மொருங்கே பொழிதரு நாவற் றூய் வனத் தமர்ந்தசுந் தரனே கஎ

சுந்தரன் காழி ஞானசம் பந்தன்சொல்விறை வாதவூர டிகள் செந்தமிழ்ப் பாடல் கேட்டரு ணின்றன் றிருச்செவி யேற்குமோ வென்றன், சந்தமில் பாடன் மற்றுநீ யிரங்கித் தண்ணளி புரிவ தெவ் வாறோ, பந்தமின் முனிவர் சூழ்தரு காவைப் பதியினம ர்ந்தவெம் பரனே கஅ

பரமனே முன்னம் பங்கயத் தயனும் பரவையில் விழிவளர் பவ னும், பரமொரு நானே னென்றுனை யெதிர்ந்து படருழந் தமையா றிந் திருந்தும், பிரமமா மன்றி வேறிலே யென்னப் பிதற்றுநர் கா ண்பரோ நின்னைக், காமலைக் காவின் மேவிய தெய்வக் கவின்மிகு சம்புநா யகனே ௰கூ

நாயக னொளிருங் காவையின் மேய நான்மறை தனக்குமெட் டாத, தூயவன் சோம சேகரன் றுலங்கு தொன்மையன் சுந்தர னேந்து, சாயகன் றனைமுன் பார்வையி னெரித்த சங்கரன் றற்பா னன்றித், தாயகம் வேறொன் றுண்டுகொ லிந்தத் தரணிமே லே ழையேன் றனக்கே உ௰

வேறு.

தனக்குவ மையி றந்தி னைத்துறை
புனத்து ழாய்முகில் போற்று றுமீசனை
மனத்துள் வைத்து வழுத்தவு மென்றனக்
கனத்தன் காலனருந்துய ரற்றவே

அற்ற மோவுய ரானைக்கா வண்ணலைக்
கற்றை வார்சடைக் கண்ணுதன் மூர்த்தியைப்
பெற்ற மூரும் பிரான்றனைப் போற்றிடா
தெற்றுக் கோபிறந் தேங்குவி ரேழையீர் உ௨

ஏழை காளினி யேனு மிருண்மலர்க்
கூழை யார்தமைக் கூடன் மறந்துநீர்
வாழை காய வளைபுயர் காவையெம்
மாழை வண்ணனை வாழ்த்தி வணங்குமே உ௩

வணங்கெ னத்தலை யோடு வழுத்தென
விணங்கும் வாயினை யீந்தடி யாரிருங்
கணங்கள் காட்டிக் கடையனை யாண்டனன்
மணங்கொ ளாவல் வனத்துறை மன்னனே உ௪

மன்ன னேமலை மங்கையோர் பாலுறை
யன்னஞ் சேர்வய லானைக்கா வண்ணலே
யுன்னை யேதொழு வேற்குத வாததின்
றென்னை நின்ற னிணையடிக் கஞ்சமே உ௫

கஞ்ச மன்ன கவின்றரு நன்முக
வஞ்சப் பெண்மயல் வாரிதி யாழ்ந்தொரு
தஞ்ச மின்றித் தவிக்குந் தமியனை
யஞ்ச லென்றரு ளானைக்கா வத்தனே உ௬

அத்த னேயொளி ரத்தி வனத்துறை
நத்த னேகுளிர் கங்கைச் சடையனே
பித்த னென்செய் பிழைபொறுத் தாண்டிடி
னித்த லத்துனை யேசுந ரியாவரே உ௭

யாவ ருன்னை யறிதரு நீர்மையர்
பூவ ருமய னோடு புனத்துழாய்த்
தேவ னுந்தெரி யானெனச் செப்பிடிற்
காவை மேவிய கன்மகள் பாகனே உ௮

பாகை நேர்மொழிப் பாவையர் மையலா
லாக மோடறி வன்பழி வேனையாண்
மாக நாட்டவர் வந்து வணங்குநன்
னாக மாவன மேவிய நாதனே உ௯

நாத னைவந்திந் நானிலத் தென்றனைப்
போத நல்கிப் பொருளெனச் செய்துதன்
பாத தாமரை தன்னிற் பரிப்பவ
னோத நீர்வய லும்பல் வனத்தனே ௧௰

வேறு.

வனத்துழாய் மாலையணி மாலவனு மலர்மேய
யனத்துவச நான்முகனு மடிமுடிகா ணாதுழலச்
சினத்திறைப் புரமெரித்த தென்னானைக் காவானென்
மனத்துள்ளே யெளிவந்த வாறென்னோ வறியேனே. ௧௧

அறியேனின் பெயர்புகன்றே யாடேனின் றிருமுன்னர்க்
குறியேனின் றனையுளத்திற் குவியேனின் றனக்கருகை
முறியேய்வெண் ணவணிபூண் முதல்வாமற் றுதலினாற்
சிறியேனுன் னருட்கயலாச் செல்வேனோ தீநரகே. ௧௨

நரகமதி லுய்த்திடினு நாதாநின் றிருவடியின்
விராகருளிச் செய்குவையேல் வெறுக்கேன்மற் றதைதயின்றே
றுரகமொடு வெண்கரியைத் துரக்கவளிக் கினும்விரும்பே
னுரகமணிந் தொளிருமுக லும்பல்வனத் துறைபவனே. ௧௩

பவமென்னும் பெருங்கடலிற் படிந்தடிந் தெந்நாளுஞ்
சவமென்னப் படுவேனைத் தண்ணளியி னெனினிதே
தவமென்னு நெறிபயிலுந் தக்கார்சூழ் காவைநகர்ச்
சிவமென்னும் பொருளின்றே தேடியடைந் தாண்டதுவே. ௧௪

ஆண்டானை யடியேனை யாளாக வனலுருவாய்
நீண்டானை நீள்சடைமே னிலவிதழி யோடரவம்
பூண்டானைப் பொருதழியும் புறச்சமயத் தவர்மனத்தை
வேண்டானைத் திருவானைக் காவானை மேவினனே. ௧௫

மேவியவெம் பந்தத்தால் வேறுவே றுருவெடுத்துக்
காவிநேர் கண்மடவார் கலவிதனி லாழ்ந்தென்றும்
பாவியேன் படுந்துயரம் பார்த்தருளா யிதருளோ
வாவிசூழ் திருவானைக் காவமர்ந்த வற்புதனே. ௧௬

அற்புதநின் றிருக்கோயி லடைந்தங்கம் புளகரும்பப்
புற்புதங்கொ ளாறென்னப் புனலொழுக விருவிழியி
னற்பினோடு நின்றுருகி யகங்குழையே னுய்வேனோ
சிற்பரனே திருவானைக் காவமர்ந்த தெள்ளமுதே. ௧௭

யிருவருடன் வீற்றிருக்குஞ் சிவக்கொழுந்தே நாயே
னான்மணக்கு முடற்பிறவி தனிலுறுதற் கஞ்சி
யுனதுபய சரணடைந்தே னபயமரு ளரசே. ௨௩

அரியபர வெளியதனி லம்மைமகிழ் பூப்ப
வானந்த நடம்புரியு மமலநின தடியைப்
பிரியமுட னுளமதனிற் பேசுறுமெஞ் ஞான்றும்
பெரிதுநினைத் திடவருளிப் பிறங்குமுன தருளுக்
குரியனா யெனைப்புரியி லுனைமுனிவா ருளரோ
வுவணமுயர்த் தோன்கமல வுயர்மனையோன் போற்றுங்
கரியமுகி லுறங்குமுயர் கொடிமதில்கள் சூழ்ந்த
காவைநகர் மேயவருட் டேயபாஞ் சுடரே. ௨௪

சுடரிலவே லனையவிழி மடவார்க டமையே
துருவியவ ணலமருமித் தொல்வினையி னேற்குன்
மடலவிழு மரைமலர்ச்சே வடிதனையே நாளு
மறவாமன் மகிழ்விறைஞ் சொழுக்குமடி யார்தந்
இடமிருந்த கூட்டனி சேர்த்தவர்கட் கேற்ற
திருத்தொண்டே புரிதருநற் செயலளித்தின் றருளாய்
தடமிடங்க டொறுங்குலவு ஞானகலத் தமர்ந்த
சசிகண்ட சிகண்டாவெஞ் சாற்றுமணி கண்டா ௨௫

கண்டாருங் கேட்டாருங் காசினியில் வெய்ய
கடியவனென் றுளநடுங்கிக் கைத்துமிக வேசக்
கண்டாரு மொழியியல்வெற் கண்ணியர்க டமக்கே
கழிமகிழ்வோ டேவல்செயக் கடவேனைப் புகழாம்
வண்டாரு மாமறைநூ புரமுமணிந் திமய
மலைமகளார் களிப்பெய்த மன்றினட மாடும்
வண்டாரும் வாரிசமென் மலரடியிற் கூட்டாய்
வளம்படைத்த காவைநகர் குளம்படைத்த விழியாய் ௨௬

விழிநிறைந்த புரத்தானும் வியனமர்ந் தானும்
வீசுமலைப் பாயறனின் விழிவளரு வானும்
கழிபொருணுங் குரியானுங் கவுசிகனுந் தூய
கைவந்த மாதவப்ப ராசரனு மருவி
யழியுமுய ரிமயவரை யின்றெடுத்த வெங்க
ளிளங்கொடியு முளங்களிவுற் றென்புகெழுந் திருஞ்
சொழியாமற் கூடந்தம்பாட் டேத்தவினி துவந்த
வையாராணைக் காவையென் னையர்போற்றி யானாய் ௨௭

ஆருடைய பிள்ளையுய ரரியதிரு மணத்தி
லலக்கடுமோ ராளாய்முன் னமைந்திருப்பே றாகிற்
கோனுடையே னின்னுனது குரைகழற்சே வடியைக்
கூடவருந் தென்றடைகொண் டேனருள்செய் தாளாய்ப்
பேருடைய காரெனவே பேசுதிரு வருளைப்
பிறவியொழி தரவைந்து பிறங்கெழுத்தோ துவதாங்
காருடைய வடியவர்கட் கிமைத்து பொழிந் தருளுந்
தந்திவனத் தேயமர்ந்த சந்திரசே கரனே ௨௮

ஈரமூன்றொ டிரண்டுடைய கரிதனையுஞ் சண்மு
கம்படைத்த கண்டூர வத்தினையு மீன்ற
வூரமூன்றொ டிரண்டுடை யொளிர்காவை மேய
வுண்மையறி வானந்த வுயர்வடிவப் பொருளே
புரமூன்று மன்றெரித்த புன்முறுவ றனையென்
புன்மலமெய் துறவினிதே புரிந்தெனையு முன்றன்
சிரமூன்று நான்குமுளார் தெரியவரி தாய
செங்கமல மலரடியிற் றங்கவருள் புரியாய் ௨௯

அருவாகி யுருவாகி யருவுருவ மாகி
யளவிறந்த வுயிராயவ் வுயிரினுக்கோ ருணர்வாய்
மருவாகி மலராகி மகத்தாகி யணுவாய்
வயங்குதிரு வருள்பதிந்த வாய்மையினோர்க் கருளுங்
குருவாகி மற்றுளவைப் பொருள்களுமாய் நின்ற
கொள்கையினை யுனையறிந்து கூடும்வகை காணேன்
றிருவானைக் காவினுறை தேவர்கடந் தேவே
தீதுடையேற் கிவ்வுலகி லேதுகதி செப்பாய் ௩௰

வேறு.

செப்பார் முலைநற் செல்லார் குழல்வெஞ் சேலார்கண்
டுப்பாரிதழ்கொண் மாதர் கலவித் தொடுகடல்வீழ்ந்
திப்பார தனி லேங்குறு வேனையு மென்று கொளாய்
அப்பார் சடையென் னப்பா காவை யமர்ந்தவனே ௩௧

தவமே புரியுந் தகவே யின்றித் தையலர்பா
லவமே வாணாள் கழித்திங் குழலு மடியனையுன்
சிவமே பொலியுஞ் சேவடி சேர்க்கச் செயிருளதோ
பவமே யடைந்தோர்க் ககற்றுங் காவைப் பதியானே ௩௨

பதியே யுண்மை யறிவா னந்தப் பரம்பொருளே
மதியேய் சடிலத் திறையே மன்றி னடமாடு
நிதியே யென்று நின்னை வழுத்த வருள் பொன்னி
நதியே புடைசூழ் காவையின் மேய நாயகனே ௯௩

நாயக னேயெனை யுன்னடி யாகிய நல்கமல
வீயக மேவ விடுத்தரு ளின்று விளங்குகடற்
பாயக மேயவன் போற்று காவைப் பதியமருந்
தாயக மைந்துடை யானுட னீற்றிய சங்கரனே ௯௪

சங்கர னேயுயர் தமனிய வரைபெறு கையலொரு
பங்கர னேமறி மான்மழு தன்னைப் பரித்தமல
நங்கர னேயுன் றன்னை யேத்தற் கருளவாயே
பொங்கர னேமுடித் தொளிர் காவைப் போரேறே ௯௫

போரேறே நின் பொன்னடி தன்னிற் பொய்ம்மையிலா
ரோரே றடியா ரடைந்தமை கேட்டு ஞானமிலேன்
வாரே றிளமென் முலையார்க் கூடி யொள்விழியி
னூரே றுநினைக் காவாய் காவை யுத்தமனே ௯௬

உத்தம மார்குண மொன்று மிலாதவில் வொதியனையுன்
பத்தமர் குறியுடை யார்கழன் மேவிப்பணி த்திடமா
றித்தரை மீதினி யுற்றுழலை யெவ்வெளியே னுய்வேன்
வித்தக நற்றல மேவிய வேதவி முப்பொருளே ௯௭

வேதகத் தாமுதல் வானவர் பெறலரும் வியன்கழல்வாழ்
வேதகத் தாவென முனையிரந் தேனருண் மினிர் சலசப்
போதகத் தாள்புரி கூத்தையு வந்தவன் புருடனையாள்
போதகத் தார்வன மேவிய தெய்வப் புனலீசா ௯௮

ஈசா நின்ற னிணையடி நீழலி லெவ்வுலகோ
ரேசா வண்ணஞ் சேர்த்தரு ளாயினை யெளியனையே
யாசார் பிறவிக் கனல் வெப் புறுத்த லாற்றகலேன்
றேசார் மாட மோங்குறுங் காவைச் செழும்பொருளே ௯௯

பொன்னூர் ஞாயில் புடைசூழ் காவைப் புத்தமுதே
மின்னூர் சடிலத் திறையே முக்கண் வித்தகனே
யொன்னார் புரமூன் றெரியப் புன்னகை யுஞற்றியவெம்
மன்னே நின்னை யன்றெளி யேன்வாய் வாழ்த்தாதே ௱

வேறு

வாழ்வினை நிலையா மென்றே மதிக்கல மந்த வாழ்வின்
றாழ்மதி யுடையே னென்னைத் தந்திமா வனத்தி லேயோ
போழ்மதிச் சடையி னாறும் பொலனடிப் போற்று மாறு
ஊழ்வினை முழுதும் வேரோ டொழித்தினி தாட்கொண் டானே ௬௧

கொண்டபன் மலரை நாளுங் குடங்கையாற் றூவி நின்றுன்
றண்டளை வீழ்ந்து நாவிற் றழும்புறப் பாடி யேற்றுப்
புண்டரக் குறிசேர் நெற்றிப் புனிதரோ டிணையுங் கூட்டாய்
கொண்டல்கண் படிக்கு மாடக் குஞ்சர வனத்து ளானே ௬௨

வடிவெழு மிலைவேல் மைபுண் வடிவகி ரனைய நாட்டத்
துடியிடை மடவா ரோடுந் தெரிவில்புரிந் துனைம றந்த
மிடியவ னேனு நின்றன் விரைமல ரடிதந் தாள்வாய்
அடியவர்க் கெய்ப்பில் வைப்பே யானைகா வமர்ந்த கோவே ௬௩

கோவல னயனுந் தம்முட் கோலமோ டெனமாகப்
பூவல யிணைப்பொற் றாளும் பொங்கெரிழ் முடியுந் தேடத்
தீவடி வாக முனைந்து செண்வரை நிவந்து நின்ற
காவைபம் பதியா னாதிக் கதிதரக் கடவு ளுண்டோ ௬௪

கடவுளென் றுரைக்கு மோர்பேர் கடிப்பது நினக்கே மண்முற்
கடப்பரு நாத மீறாக் கருதுதத் துவங்க ளியாவுங்
கடந்துள தன்மை யாலே கன்னமுன் றைய மேறு
கடகரி முகனை யீன்ற காவைமா நகரத் தானே ௬௫

நச்சர வுச்சி யாட்கு நகுமுக மனைய காவை
முச்சக மீன்று ளோடு முடங்குமாற் றிலந்தி வேழ
மிச்சனும் பாவு மெங்க ணிமலக் கொழுந்தை யாண்டு
மெச்சயிற் பொருளை நாயே னேத்திடா தயர்ந்த வாறே ௬௬

அயர்வறு கல்வி சாலி ராயிரத் தாலோ னேனும்
பெயர்பல வற்று ளொன்றைப் பேசுவார் புகழைப் பேசப்
பயமுறு வானேற் காவைப் பதியுளா யுனது கீர்த்தி
யுயர்வுசால் கலையி லேனோர் நாவினா லுரைப்ப வற்றோ ௬௭

உரையொடு பொருளு மாக வொளியினோ டிருளு மாய
விரையொடு மலரு மாகி மெய்யொடு கீழு மாகித்
தரைமுதற் பூத மாகத் தயங்குவை யலவா மென்னும்
புரைதபு வெள்ளை நாவற் புரிமிழு மனிற்கண் டேனே ௬௮

கண்டதே காட்சி யிந்தக் கடலுடை யுடைய பாரிற்
கொண்டதே கோல மன்றிக் கூர்மகிழ் வோடெஞ் ஞான்று
முண்டதே போக மென்பா ருறவொழித் தெனையாட் கொள்ளாய்
வண்டர்பாண் மிழற்றுஞ் சோலை வாரணக் காவுளானே ௬௯

வாரணத் துரியான் மேனி மறைதரப் போர்த்தா னென்றோ
வாரண முகப்பிரானை வழங்கின னென்றோ வன்றி
வாரண வடிவை முன்னர் மருவின னென்றோ விந்த
வாரணக் காவின் வாழ்க்கை மகிழ்ந்தனை வள்ளா லீயே ௭௰

வேறு

வள்ளலென வேயுதவா மாதுடரைப் பாடி
மொள்ளறிவி னுவலர்கா ளும்பல்வன மேய
பிள்ளைமதி சூடியவெம் பிஞ்ஞகனைப் பாடி
லெள்ளலக லெப்பொருளு மெய்தலெளி தாமே ௭௧

தானெனத் பிரமமெனச் சாற்றிமத மெய்தி
யூனைசு மக்குழல்வி ருட்கடைகி லீரோ
ஈனனேயே பிரமமெ மற ஞானிசிரங் கொய்துங்
கானையுங் கொண்டறையணி காவைநக ரானே ௭௨

காவைநகர் மேயவருட் கண்ணுதலார் பாதப்
பூவைமகிழ்ந் தேத்துகிலாப் புல்லறிவீர் நும்பாற்
கோவைநிகர் தாவுரப்பிங் கூற்றனவரி னீவிர்
நாவையசைத் தனவற்கு நவிலவெவன் வல்லீர் ௭௩

எவனெள்ளி னெய்யெனவே யாண்டுநிறைந் துள்ளா
னெவன்படைத்துப் புரந்தழித்தற் கேற்றவன்மூ வடிவ
மெவன்முதலோ டிடைகடையி லாதிருப்பா னென்று
மவனெனையாட் கொளுங்காவை யண்ணலெனக் கண்டாம் ௭௪

கண்டமதே யென்றுமுத லென்றுகரை வார்கள்
சென்மமகன் றுவடியிற் சேர்ந்துசுகிப் பாரோ
தமமக லாதொளிருந் தந்திவன மேய
புமலம கன்றவர்பு சித்திடுநற் பேறே ௭௫

பேதையர்த மையலினாற் பேதுறுகின் றேனைப்
போதமைநின் பொன்னடியிற் பொருத்துவையோ வன்றித்
தீதமைக ருக்குழியிற் சேர்ப்பையோ நின்சித்த
மேதறியேன் வேழவனத் தேய்ந்தபெருங் கதியே ௭௬

கதிரொளியுங் கண்ணொளியுங் கலப்பதுபோ லுன்றன்
மதுவவிழு மலரடியின் மகிழ்வொடு கலக்கு
முதிர்வருசுத் தாத்துவித வுண்மையெனக் கருளாய்
வெதிர்புரைமென் றோளியர்சூழ் வெழுமனத் தானே ௭௭

தானமொடு தவம்விரதஞ் சற்றுமறி யாத
தீனனுமுன் சேவடியிற் சேர்ந்துசுகப் பேறு
தேனமர்பொ தும்பர்தொறுஞ் செழுமயில்க ளாடு
ஞானதல மேயவுயர் நாரவடி வாளா ௭௮

வடிகமழும் வேல்விழியார் மையலெனு மோதுங்
கடிகமழுஞ் சலதியிடைத் தமியனுழ லாதுன்
கடிகமழு மலரடியாய் கலமருள்வை தென்றே
பொடிகமழு மேனியுடைப் போதகவ னத்தாய் ௭௯

தாயினுநல் லாய்நினையே சார்ந்தவொரு நாயேன்
தீயில்புழு வொத்துருகிச் செல்லலுற னன்றே
ஞாயிறொடு சந்திரனு நாடிமகிழ்ந் தேத்து
காயில்கனி யார்ந்துபொலி நாகவன மேயாய் ௮௦

வேறு

நாக வங்கிளை தொழுமுறை நாகம தெல்லா
நாக மேயவைந் திருவினை நகவினை தீர்க்கு
நாக மானனத் தேயமர் நம்பா னுய
நாக வெஞ்சிலை நாதனை நாடுதி மனனே ௮௧

மனமெ னும்பெரு மாமத யானையை வயங்குந்
தனமெ னும்மலர்த் தாட்டுணை யாகிய தறியிற்
சினமி லன்பெனுங் கயிற்றினாற் சிமிழ்த்திடு வேனே
வனமி குந்தொளிர் காவையின் மேவிய மணியே ௮௨

மணிமு கங்களை ராறுடை வள்ளலை யீன்ற
பிணிமு கந்தொழுங் காவையெம் பெரும்பதி யார்க்கே
பணிபு ரிந்திடப் படுமென இடைப்பக ரேர்ந்தின்
றணுகி யாதுநீ யியற்றிட வல்லையந் தமனே ௮௩

தகைமை சானின தருளினைச் சார்வது முளதோ
நகைகு லாமலர்ச் சுரிகுழற் றோகையர் தமக்கே
அகமெ லாமளித் திடருறு மளியவ னேனே
செகமெ லாம்புகழ் காவையின் மேவிய சிவனே ௮௪

சிவந்த கட்பெயர்ச் செம்பியன் செய்வரி பாட்டை
யுவந்த காவையம் பெருமதி யாகத் தனை யுளமே
நவந்த ருந்துதி கொடுத்துண நாடுவை யாவற்
பவந்த விர்ந்தரும் பாமதி யிடையப்படர் வாயே ௮௫

வாயி னுலுனை வழுத்தக வேலன்றிரு வயங்குஞ்
கோயில் சூழ்ந்தறி யேபசி மேற்காங் கூப்பி
சேயிதழ்க்கனி மொழிச்சிறு மியர்மயற் றீரா
னுயி னேற்கனிக் கதியெவ னுகமா வனைத்தாய் ௮௬

மாவ ணங்கொளு மரலவ னெடுமல ரவனுந்
தூவ ணங்கொளு மலர்கொடு தூய்த்தொழ நேர்ந்துங்
காவ ணங்கொளு மறுகுடைக் காவையம் பானை
நீவ ணங்குதி நிகரிலாப் பதம்பெற நெஞ்சே ௮௭

நெஞ்ச மேயினு மஞ்சுக னீயெவ னொடுநே
கஞ்ச மார்சுனைக் காவையங் கடிநக ரானைத்
தஞ்ச மாவது நீயலா லிலையெனச் சார்ந்தும்
வஞ்ச மார்மன முறுவிசெய் வாதனை தனக்கே ௮௮

வாத வூர்வரு மறைமுதற் றலைவர்வாய் மலர்ந்த
போத நற்றமிழ் மாலையைப் புகன்றுகேட் டருள்செய்
சீத நீர்வயற் காவையிற் றிகழ்தருந் தெய்வ
நாத னாமர்ந் திடவென துள்ளநற் றளியே ௮௯

தளிரி யற்கொளு மேனியந் தையலார்க் கூடிக்
களிகொள் வெம்மனக் கடையனே னாயினு நின்று
மொளிகொ டாமரை மலரடி நினைப்பினை யொழியே
னெளிகொ ளுவனன் னீழலி லமரருட் பிழம்பே ௯௰

வேறு

அருளு ருக்கொளு மால நீழ லமர்ந்து நால்வ ரகத்தெழு, மருளி ரித்துமுப் பொருளின் வாய்மை வகுத்த ஞானவ ரோதயா, தெருள்கொள் செவ்விழிச் செம்பி யன்றினஞ் சிந்தை யோகையோ டேத்துறும், பொருள்கொள் காவை யின்மேய தெய்விகப் புண்ணி யப்பொருள் போற்றியே ௯௧

பொருதிரைக் கடலிடை யுறுந்தெழு பொங்கு காளகூடத்தையே
இருமி டற்றி லமைத்து வானவர் திரளை யாண்டருள் செல்வமே
கருவிமா மழைகண் படுக்குநற் கடிகொள் பற்பல காவல்சூழ்
பொருவில் காவையம் பதியின் மேவிய புநித சிற்பர போற்றியே
௯௨

நாய காவறு பத்து மூன்றானன் னாயன்மார் தமை யாண்டரு
ளேய வாமறை யோன்ற னாலுமே தொடரொணா மற்றுலங் குநற்
றேய மார்சடைச் சுந்த ராசுவ தந்தரா சுதைத்தொ டுகெடற்
பாய லான்றொழுங் காவை மேவிய பஞ்ச கிர்த்திய போற்றியே
௯௪

பஞ்சு லாம்பதப் பணிமொழிப் பெரும் பந்துலா முலைப்பா வைமார்
நஞ்சு லாங்கொடு வேல்வி ழிபொரா நன்னி லைகுலை வென்றனைக்
கஞ்ச மென்மலர்த் தாட்டு ணைதனைக் காட்டி யாண்ட புராதனா
மஞ்சு லாம்பொழிற் காவை மாநகர் வயங்கு பேரொளி போற்றி
யே ௯௫

ஒளிகொள் வெண்பிறை சூடு செஞ்சடை யுலக காரண போற்றி
யே, யளிகொ ளன்பருக் கெய்ப்பில் வைப்பெனு மமல நாயக
போற்றியே, களிகொள் தேவர்க ளோடு நான்மறை நாடரும்
பொருள் போற்றியே, களிகொள் வண்டிசை பாடு பூம்பொழிற்
காவை மேயவ போற்றியே. ௯௬

மேய பாரிடை யைந்த தாகி விளங்கு நீரிடை நான்கதாய்த்
தேயு தன்னிடை மூன்ற தாகியே செப்பு காலிடை யிரதாய்ப்
பாய விண்ணிடை யொன்ற தாகிப் பரந்து நின்றிடு பான்மைகொ
ளேய ஞான தலத்தின் மேவிய சுருதி நாயக போற்றியே. ௯௭

சுருதி யாயிர மாயிரம் பெயர் சொல்லி வாழ்த்துநற் றூயவா
கருதி யென்வினை மாச றுத்து கடைக்க ணித்தக பாலியே
குருதி வேற்கரக் குகனை யீன்றருள் குலவும் மட்டகு ழலயா
தருண மாமதி சூடுகா வையெஞ் சகள நிட்கள போற்றியே ௯௮

போற்றி சங்கர போற்றி சாம்பவ போற்றி சந்திர சேகரா
போற்றி புங்கவ போற்றி புண்ணிய போற்றி பூதநன் னாயகா
போற்றி பன்னக பூட ணாபுகல் போற்றி காமபு ராந்தகா
போற்றி வதுலித காவை மேவிய பூரணப் பொருள் போற்றியே
௯௯

பூர ணாநி னதுயர் கொள் பொன்முடி போற்றி போற்றி
நின் பொலிமுக, நார ணாதிய ரேத்து நின்புயம் போற்றி போற்றி
நினாற்கரம், பார ளாவுறு மன்பர் மும்மலம் பாற்றி யன்னவர்க் கரு
ள்செயு, மேர ளாவுறு வேத நூபுர மிலங்கு சீரடி போற்றியே ௱

## வாழ்த்து.

தழைதரு வெள்ளை நாவலன் னீழற னிலமர்
தனிமுதல் வாழ்க
கழைதரு மொழிகொ ளுயரகி லாண்டக்
கவின்மிகு நாயகி வாழ்க
விழைதரு மிவருக் கன்புசெய் மனத்து விளம்புறு
மடியவர் வாழ்க
பிழைதபு தூய வைதிக சைவப் பெருநெறி
யேமிக வாழ்க.

முற்றுப்பெற்றது.

ஸ்ரீமெய்கண்டதேசிகன் றிருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.